


# ஷம்சுத்தாசின் கோவை.

இது

பிரபல வர்த்தகரும்
வெட்டுவாங்குளமாதிய கிராமங்களுக்கிறைந்தாரும்
பாளையங்கோட்டை ஆனரெரி மாஜிஸ்ட்டிரேட்டுமான
மேலப்பாளையம் ஸ்ரீமான்
வ. செ. த.
ஷம்சுத்தாசின் தரகனாரவர்கள்மீது

—————*—————

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புலவருளொருவரான
தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்
மகாமதி, சதாவதானி
கோட்டாறு

**கா. பு. செய்குதம்பிப் பாவலரவர்களால்**

இயற்றியது

———

மேலப்பாளையம், வித்வான்
வ. அ. மல்க்கான்அலி சாகிபவர்கள்
இயற்றிய
அரும்பதவுரையோடு

சென்னை:
ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1919

# இப்புத்தகத்தி லடங்கியவை

—:*:—



—§—



ஸ்ரீமான்,
வ. சே. த. ஷம்சுத்தாசீன் தரகனார்
பிரபல வர்த்தகர், இனாம்தார்,
ஆனரெரி மாஜிஸ்திரேட்.
மேலப்பாளையம்.

வறியவருக் கேறுவே யிசையென வள்ளுவனார் சாற்ற லுற்ற
நெறியதனுக் கிலக்கியமா நிற்பரிவர் சித்தசித்த நிறையச் சொன்னம் (௩)
குறியறிந்து கொடுப்பதன்றிக் குடியிருக்கக் குடில்பலசெய்துங் குயிற்றி ஞாயி
புரியதென்றும் பெயர்புனைந்து வறிஞருக்கெலாமளித்த புண்ணியனே.

வித்தானத் திறுமன்ன தானமதே யேற்றமென விசைப்பர் பல்லோ
ரத்தானத் திறுமிக்க தாகும்வித்தி யாதான மதற்கீ டீந்து
பத்தாயி ரங்கொடுத்துக் குடியேற்றத் தார்க்காகப் பள்ளி யொன்றுங்
கத்தாவைத் தொழுதிடற்கோ ராலயமுங் கட்டிவைத்த கனதி யாளன். (௪)

ஆக்கமிலாத் தனமதென்று மதைப்படைத்த மாந்தரெலா மவனி மீது
நோக்கமுறத் தாதுகரங் கால்களெனு மங்கமொடு நோயில் லாத
வாக்குயிருந் தாழுமனை யில்லாராய் வாழ்வரென வழங்கு முன்னோர் [௫]
வாக்கையெலாம் பொய்யாக்க வாக்கைபெறுத் தவதரித்த வாய்மை யா

இன்றுசெய் தார்களை விதஞ்செய்த லேமுறையென் றியம்பு மாறே
யின்றுளர் தாமுமில்ல மிழிந்தயலி னேரிடத்து மேவுங் காலை
யொன்றுரி னுரைக்கினைங்கி யுபயபுத்தி ரர்க்கும்விட வுண்டி யீந்த
வன்றுணுக் காயிரங்கி யபயமுட னர்த்தமளித் தாண்ட வண்ணல். (௬)

இத்தகைய வாண்டகைமேற் கோவையொரு நானூற்றி னேடி ரண்டு
பத்ததன்மே லைந்துகவி யாலியற்றிப் பார்க்களித்தான் பகரு மந்த
வுத்தமனு ரோவென்னி னுரைக்குதங்கோட் டாறுநக குறைந்திலெஞ் சே
தந்தம்பிப் பாவலனு முத்தமிழின் சாகரமாங் குரிசின் மாதோ. (௭)

தேவாயிர் தப்பிரசங் கக்களஞ்சி யம்மெனவுந் தெரிந்த மேலோர்
நாவாண்ம காமதியா னெனவுமிரு பட்டங்க ளல்கப் பெற்றுப்
பூவாருஞ் சென்னைமிசை யவதான மொருநூறும் புரிந்த வித்தப்
பாவாண னருள்கோவைப் பயன்விரித்த லெவர்க்கும்வெகு பார மம்மா. (௮)

---

நல்லாசிரியன் பத்திராதிபரும்
மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புலவருளொருவரும்
சென்னை வேப்பேரி குயின்மேரிஸ் காலேஜ் தமிழ்ப்பண்டிதருமான
ம-ா-ா-ஸ்ரீ, கா. நமச்சிவாய முதலியார்
அவர்கள் இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாமருவும் புகழ்படைத்த மேலப்பா ளையம்புரக்கும் பண்பு வாய்ந்தோன்
நாமருவுங் கவிவாணர் நயமருவப் பொருள்வயங்கும் நலமே சான்றோன்
காமருவு கொடையாளன் ஷம்சுத்தா சின்பெயர்கொள் காவ லோன்மேற்
றேமருவு சுவைமருவு கோவைநூல் வளம்பெறவே செய்திட் டானால்.

தென்னைய பனுவலெயு மிம்மென்று மனையினி லியற்ற வல்லோன்
செவ்வியசெந் தமிழ்ப்புலவன் ஷெய்குதம்பிப் பாவலனுந் திகழு மேலோன்
அவ்வியமின் றவகத்துக் காணுமரும் பொருளனைத்து மறிவித் தாலும்
திவ்வியசத் புலமைபழுத் தெழுமல்கா னவியென்னுஞ் சீரி யோனே.

---

இந்நூலாசிரியரது மாணவர்களுளொருவரான
தென்கம் புதூர் வித்வான்
ம-௱-௱-ஸ்ரீ, சாத்தான்குட்டிப்பிள்ளை
அவர்கள் இயற்றியது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீரேறு கலைபடையான் செய்யதிருக் குணமுடையான் சேணு லாவுங்
காரேறு கரதலத்தான் காட்சிமிகு ஹாமீமெனக் கழறு மூரான்
பாரேறு புகழுடையான் பரம்பொருளை புளநிறுத்தும் பான்மையுள்ளான்
தாரேறு செழுமார்பன் ஷம்சுத்தா னென்பெயர்கொள் தக்கோன் மீதே.

தெள்ளியபாற் கடல்கடைந்து தேவர்பொருட் டாலமுதந் திரட்டு மது
போ, லொள்ளியசீர் தமிழ்க்கடலி லுயர்வுபெறு மகப்பொருளி லோரு
யன்பி, னுள்ளியவைர் நினைக்கோவை யெனவொருநூ லுவந்திசைத்
தா ருலக முய்யத், தள்ளியவெவ் வினைதணித்த தக்கோனை யாவனெ
னச் சாற்றக் கேண்மோ.

விண்பட்ட தருமலியும் பொதிகையில்வாழ் குறுமுனிவன் விரித்த வைந்
து, பண்பட்ட விலக்கணமு மிலக்கியமு முலகுவப்பப் படித்துத் தேர்ந்
தோன், கண்பட்ட மணிபோல்வான் கருதுமுயிர் பான்மையுளான் கற்
றோர்போற்று, மெண்பட்ட புகழுடையா னிகழ்வுடையான் கோடைநக
ரிருந்து வாழ்வோன்.

முன்னரிய சென்னைதனில் மூதறிஞர் பலர்கூட முறையே நூறு
பன்னரிய வவதானப் பண்படுத்துக் காட்டியிரு பரிசு பெற்றோ
னுன்னரிய புலவரெனு முடிக்களிடை மாமணியா யொளிரு மேலோன்
மன்னரிய கலனுடையான் ஷெய்குதம்பிப் பாவலனு மதிவல் லோனே.

---

இந்நூலாசிரியரது மாணவர்களுளொருவரான
பறக்கை, வித்வான் ம-௱-௱-ஸ்ரீ,
நா. மாணிக்கவாசகம்பிள்ளை அவர்கள்
இயற்றியது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீர்தழுவுஞ் சோலையிடைக் கனிதேனுங் கைமாவின் கடமுங் காவு
மேர்தழுவுஞ் செந்தமிழு மிடைச்சேரி யாலைக்கு மிருஞ்செஞ் சாந்தம்
போர்தழுவி யிருமருங்கும் பொன்வீசி மணநாறும் பொருநைப் பாங்கர்ப்
பார்தழுவும் பனைபத்தோர் பழம்பதியா மீன்புரமென் பார்கண்மன்றே

அச்சகரான் றன்னிடையே யடைந்தவர்க்குக் குறிப்புணர்த்தி யருள மாற்றும், பொன்னகரான் றுரைகரான் புயவெளியான் மதனிகரான் பொருந்து கீர்த்திச், சென்னிகரான் சுடர்க்கு நிகர் செல்வத்தின் செந்திட லேயியற்று சோலை, பன்னரிய துறைபெறுந்த பரமானாயகனுமம்பல த்தான் மாதோ. (2)

சொன்னலமும் பொருணலமுந் தொடைநலமு நடைநலமுந் துறை யிற் றோன்று, மின்னலமு மிதனிடையே யெழின்மடக்குச் சிலேடையு மொ றுகை மோனைப் பன்னலமும் பழந்தமிழாற் பழுத்தொழுகு மிந்நூ லைப் பண்டு வோர்செய், நன்னலமு முறுசோலை நவிலிருந்தி நாவ ரநவிற்றலாமே. (3)

அன்னவன்யா ரெனிலுரைப்ப னருந்தமிழைப் பண்டறிஞர்க் கருளி லைத்த, முன்னவனே யிப்புவியின் முன்னினனென் றன்றோர்கள் மொ ழியு மாற்றான், சென்னை தனி லவதானஞ் செய்துபல கற்றறிஞர் தேர் ந்துரைத்த, மன்னவனும் மிகச்சிறந்தோன் மதிவலர்க்கு மிடிபெரு மி மை சான்றோன். (4)

அருளுருவோ பொருளுருவோ வன்புருவோ வின்புருவோ வான செ ல்வன், கருவுருவோ வினியிலதான் காசினியிற் புக்குருவே கற்ற யாரு மெருளுறவே விடைபகர்வோன் வேறுமுள வெம்மதமும் வேறென் றும் லொருபொருளே கடவுளென வுரைபகர்வோன் வரைதவறு வண்மை மிக்கோன். (5)

திருவாரு நலம்படைத்த திருநகராங் கோட்டாற்றிற் சிறப்புற் றோங் கு, மொருவாத நண்புடையா ருளவிர்பக்கீர் மீரானன் பொருவா செரு சன், தருவான கொடைக்கரத்தான் றன்மகவென் றுலகுதித்தான் றழும் கும் வேலை, பொருவாத நற்கலையான் புலவர்மகா மதியெனப் புகழ்ப் பெற்றான். (6)

மாவாரு பெருந்தனை மருவினருக் குயர்வருளு மாறேகல்விக், காவா ரு மடையிறுட னரும்புலமைக் கானக்கு மருமை வாய்ந்தோன், நாவாரு நறுந்தமிழை நன்றெனக்கு மருள்குரவன் ஞான ரூபன், பாவாரு நாவ லட்டியான் பண்புடைசெய் குத்தம்பிப் பாவலோனே. (7)

---

இந்நூலாசிரியரது மாணக்கருளொருவரான

கோட்டாறு வித்வான் ம-ா-ா-ஸ்ரீ,

பி. ஆறுமுகப்பிள்ளை அவர்கள்

இயற்றியது.

கொச்சகக்கலிப்பா.

பூமணக்கும் பொழிலுமெழிற் புனன்மணக்குந் தடமுமரு
ளுமணக்குந் தமிழுமிகு நலமணக்கும் புலவருடைய
தேமணக்கு மறிவினருஞ் சிறப்பமர்ந் தமருதற்
கோமணக்கும் புகழ்மணக்குங் கோட்டாறு செழும்பதியில்.

## சாத்துகவிகள்.

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான
கோட்டாறு வித்வான், ம-ள-ள-ஸ்ரீ,
கிருஷ்ணசாமிப்பிள்ளை அவர்கள்
இயற்றியது.

நேரிசையாசிரியப்பா.

திருவளர் தாமரைத் தேம்பொழி லுடுத்த
மருவளர் பாண்டி வளநாட் டின்கண்
தண்டுறை மேவுந் தாம்பிர வன்னியும்
வண்டுறை சோலையு மருங்கு விளங்கும்
ஞாபீம் புரமெனு மரும்பதி வாழுஞ்
சோம வெண்குடை யக்கிய செல்வன்
தக்கோன் ஷம்சுத் தாசி னெனும்புகழ்
மிக்கோ னகம் விளங்க வைத்திணைக்
கோவை யென்னுங் குலவிய வாரம்
மேலச் சூட்டினன் விரிநீர்க் கோடைப்
பதிவாழ் செல்வன் பண்புறு குணத்தோன்
கதிபெற வெற்குத் தமிழ்கற் பித்தோன்
தொல்காப் பியமுதல் தோன்றி லக்ஷணமும்
பல்காப் பியமும் பயிறரு நாவினன்
சொன்னய முதலாச் சொன்னபன் னயமுந்
தோன்றப் பாடுந் நயாக் கவிஞ
னுன்னு மவதான மொருநூறும்
பன்னிய செய்குத் தம்பிப்பா வலனே.

---

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான
காமரகுளம் ம-ள-ள-ஸ்ரீ,
எம். சிவதாணுக்கவிராயரவர்கள்
இயற்றியது.

நேரிசை வெண்பா.

பொன்னணிகொண் மாடமலி ஞாபீம்புரிக்கோர்
மன்னனென வந்துதித்த வள்ளலெனும்—மின்னுவிசே
கோவை பலபுனைந்த கோன்மைஷம்சுத் தாசின்மேல்
கோவையொன்று செய்தளித்தான் கூர்ந்து.
சீரார்செய் குத்தம்பிச் சீரியன்றன் றிம்பாவை
யூரார் புகழாதா ரம்புவியிற்—பேராகும்
வண்மணியா மென்னுட் கலந்துநின்ற கற்பகமா
மென்னுங் கவிராச ரேறு.

---

ஓம் ௳ பீம்.

பிஸ்மில்லாஹி.

# சிறப்புப்பாயிரம்.

சென்னை பச்சையப்பன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

ம-ா-ா-ஸ்ரீ, கா. ர. கோவிந்தராஜ முதலியார்

அவர்கள் இயற்றியது.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீர்கொண்ட குணங்களுக்குச் செவ்வியசல் லியலிடமாய்த் திகழு நல்லோன், ஏர்கொண்ட நிலமெல்லா மெழில்கொண்ட தன்புகழே யிலக வைத்து. சார்கொண்ட மனத்தோர்க ளைன்மொழிகொண் டினிதுரைக்கு நலமே கொண்டோன், கார்கொண்ட கொடைக்கரத்தோன் கவின்கொண்ட நன்முகத்தோன் கனிந்த சொல்லோன். (1)

உய்ப்புநெறி முறைக்குறுகல் லுறநிலெலா மினிதுணரா வுலக முய்யச், செய்யுளமு தனையவருந் தெங்கவிகள் பலவியற்றிச் சிறந்தோர் நாமும், அய்யனைப் பணிந்திடச்சா ரருண்ஞானி யார்சாய்பா மலர் பொற்பார், துய்யவடி யிணைக்கமலந் தன்னவுறு வயமெனவே துலங்கு நெஞ்சன். (2)

இசையாருங் கனிமழலை யேய்ந்துறுதன் மக்களுக்கா யீந்த ட்சுசு, வசையாரு மொருவனுக்கு மதிபுலத்தா னலம்புரிந்து மாசை தந்த, அசையாத வறநெறியோ னனியினுக்கோ ரகரமா யமைந்த மேலோன், இசையாரும் விழைதருஞ்சீர் வெட்டுவாங் குளத்தனக்கிங் கிருந்தா ராஜேன்.

தன்மதிசேர் குளிர்முகத்துச் சார்சென்று மாசர்பிரான் றந்த வொப்பில், மன்மதிசேர்ப் பொற்பதக்க மாண்புறுதன் றகைமையினுல் வாய்க்கப் பெற்றோன், பன்மதிக்கு மொழிமழலைப் பைங்குழன்மெல் லிடையுடையார் பார்த்துருகான், விண்மதிக்கு மிகத்தளர்ந்து மெலிவுற்று மனங்கவலும் வேளே போல்வான். (4)

பேசரிய பெருஞ்செல்வன் பெருமையிகு வாணிபத்திற் பிறங்கு மேற்போன், மாசிலருண் முகம்மதிறை மாமறையி னெறியகலா மாண்பார் நெஞ்சன், தேசுறுநல் வும்சுத்தா சினைப்பேர் செறிந்திலகு செம்மை யோன்றன், ஆசிலருங் குணங்களெலா மகத்தன்னி யதுலா மன்பு அண்ட.

பொன்னணியி னன்மணிகள் பொருத்தியவாத் தன்னரிய புலமை சான்ற, பன்னலிகொண் டினிதிலகும் பாக்களிடை யவன்புகழே பதிய வைத்து, மன்னவிரு மியற்றமிழின் வளஞ்சார்ந்த கோவையொன்று வழங்கி னுன், முன்னருஞ்சொற் புலவோர்கள் முதநிரு விவனென்று மொழிய மன்னே. (6)

அன்னவன்ற [illegible] மருங்கோட்டின் [illegible] இன்னலஞ்சேர் கோட்டாறென் றினிசியம்பும் பதியின்கண் [illegible] வோன், உன்னருஞ்சீ ருவதாமோ ரொருநாற [illegible], பன்னுமெழிற் சொற்புலவோர் யாவுமியெ [illegible] றோன். (7)

பன்னூடியலுந் தமிழ்நூற்கள் பலவுணர்ந்தோ னரியவுருள் பார்த்த யாரில், [illegible] நெறிநிற்போ னிசைசெய்யுந் தம்பிப்பா வலனென் றோதும், பண்டமைபுன் கவிவாணன் பண்புடைய கட்பானன் படியிற் சேர்த்தி, எண்டிசையுந் தழைவித்தோ னின்மொழியன் பன்னலஞ்சார்ந் திலகு வோனே. (8)

அன்னவனக் கோவையகத் தரும்பொருளை யாவருமே யறியும் வண்ணம், பன்னுமரும் பதவுரையைப் பகுத்தளித்தார் பாங்காகப் பகரிற் செய்ய, பொன்னிறுக்கும் பொன்னுமெப் பொலிகுணத்தான் வாணிபத்தின் புலமை மிக்கான், உன்னருஞ்சீர்ப் புகழ்மணமில் வுலகமெலாம் பரவுறு முறுநி யானன். (9)

கற்றவர்க்கு கற்றுணைவன் கனிதோற்று மின்மொழியன் காசி னெஞ்சன், கற்றிறஞ்சார் செந்தமிழ்நூ னவிலுமரும் பொருட்டுறைக ளாய்ந்த சாவன், செற்றமிலாக் கோட்டாற்றுச் செய்யவருண் ஞானியர்பாற் செழித்த வன்பன், பற்றியசீர்க் கருமமில்போற் பாவலர்பாற் றன்னளிசெய் பண்பின் மிக்கோன். (10)

பொன்றலில்சீர் முகம்மதிறை புனிதமறை வழியொழுகும் புலமை சன்பன், என்றனக்கு மின்றுணைவ னெழிலார்ந்து பொலிமுகத்த னியைந்த செல்வன், மன்றல்செறி குழன்மடவார் வளர்தனங்க டோயவிழை வணங்கொண் மார்பன், துன்றமல்கா னலியெனுஞ்சீர் தோய்பெயர்கொ ணத்தனைத்துத் தாயன் மன்றே. (11)

சிறப்புப்பாயிரம்

முற்றிற்று.

---



ஹாமீம்.

பிஸ்மில்லாஹி.

# ஷம்சுத்தாசின் கோவை.

MAHAMAHOPADHYAYA DR. U. V. S. IYER LIBRARY BESANT NAGAR, MADRAS-90

—:*:—

## காப்பு.

கட்டளைக்கலித்துறை.

திருவார் மருமகற் செய்குமன் சூர்தினஞ் செய்தவரோ
டுருவா யமைந்தபு மான்ஷம்சுத் தாசி னுவந்தணியுங்
கருவா ரகப்பொரு ளோங்கிளைக் கோவை கழறநிதம்
மருவா ருருவி னகப்பொருட் குள்ள மமைந்ததுமே.

---

நூல்.

## களவியல்.

அஃதாவது-பொருளதிகாரத்துட் கூறப்பட்ட உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் பிறவுந் தம்முளொத்த பதினைந்தாண்டும் பத்துமாதமுஞ்சென்ற தலைவனும் பதினோராண்டும் பத்துமாதமுஞ்சென்ற தலைவியும் கொடுப்போரும் பிறருமின்றி யூழ்வயத்தாற் றாமேயெதிர்ப்பட்டுப் புணர்தற்றன்மை. இங்ஙனம் புணர்தல் அகப்பொருளிற் கூறிய எண்வகை மணத்துட் காந்தருவமணமாய்க் கைக்கிளைமுதல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலீறாகிய பதினேழு கிளவித்தொகைகளை யுடையது; அவை வருமாறு:—

---

### கைக்கிளை.

அஃதாவது-தலைவன் மாட்டாவது தலைவிமாட்டாவது நிகழு மொருதலைக்காமம்; அவற்றுளிது- தலைவன்பாற்படு மொருதலைக்காமமாய்க் காட்சி ஐயம் துணிவு குறிப்பறிதல் என நான்குவகைப்படும்; அவை வருமாறு:—

காட்சி.

(இ-ள்.) தலைவன் தலைவியை ஒருபூஞ்சோலையிடத்துக் காணுதல்.

மாவேல் தழைத்து வனசமுங் கோங்கு மருவியல்லிப்
பூவே புணர்ந்து புதுநற வேற்றனி பூண்டுபுகழ்க்
கோவே யெனவரு வோன்ஷம்சுத் தாசின் குளிர்சிலம்பின்
காவே சிறப்ப நடுவிலொர் பூங்கொடி காண்கின்றதே. (1)

ஐயம்.

(இ-ள்.) கண்ட தலைவன் இவள் எந்த வுலகத்துப் பெண்ணோ? வென்று சந்தேகப்படுதலைக் கூறுதல்.

வானோ புவியோ மலையோ கடலோ மதியிரவி
தானோ வனசத் தனித்தவி சோவுற்ற தண்டமிழ்க்கோர்
கோனோ வெனவருள் வோன்ஷம்சுத் தாசின் குளிர்சிலம்பின்
கானோ டொளிதரு வாளிரு டந்தவக் காவகமே. (2)

துணிவு.

(இ-ள்.) சந்தேகிக்கப்பட்ட தலைமகள்பாதம் பூமியிற் படிதலாலுங் கண்புடை பெயர்ச்சியாலும் பூலோகத்துப் பெண்ணெனத் தெளிந்து கூறுதல்.

காலே பதிந்தன கண்ணே யிமைத்தன காணுமலர்
மேலே புலர்ந்தன மெய்ந்நிழல் கண்டன மேவுமிவற்
றாலே பரசர்பி ரான்ஷம்சுத் தாசி னருட்சிலம்பின்
பாலே யமரிட மன்றிமற் றில்லையிப் பாவையர்க்கே. (3)

குறிப்பறிதல்.

(இ-ள்.) தெளிந்த தலைமகன் தலைவியின் வேட்கை அவள் பார்வையாற் றன்னிடத்துள்ள தென்றறிதலைக் கூறுதல்.

படையே யுறுகைத் தலத் தோன்ஷம்சுத் தாசின் பனிவரைசேர்
நடையே யிலருள ரெஞ்சென் றிரண்டொரு தண்கமலப்
புடையே சமர்களார் நீத்தல்செய் பண்டிதர் போன்றவிவ
ளிடையே யில்லையா லினித்தன மோவர்தின் கெய்துறுமே. (4)

கைக்கிளை - முற்றிற்று.

---

## இயற்கைப் புணர்ச்சி.

அஃதாவது-தெய்வத்தானாவது தலைவியர்களாவது கூடுதல்; அவற்றனுள்—தலைவியாற் கூடுதலெனக. அது: வேட்கைபுணர்த்தல், மறுத்தல், உடன்படல், கூட்டமென நான்கு வகைப்படும்; அக்நான்கும் இரந்துபின்னிற்றற் [illegible] முதலிய பதினாறும் பிறவுமாகிய விரிகளையுடையன; அவையாவன:—

இரந்துபின் னிற்றற் கெண்ணல்.

(இ-ள்.) தலைவன் தலைவியையாசித்துப் பின்னிற்றற்கு நினைத்தல்.

தேடித் தனர்தரு வோன்ஷம்சுத் தாசின் செழுஞ்சிலம்பில்
வாடி யலையேல் வருவாய் மனமே மகிழ்ந்திரத்தற்
கோடி புகுவோ முறுவா யமுதோ டொளிர்வளைபோற்
கோடித் தனமுன ரொன்றிரண் டீதுவர் கூடுகர்க்கே. (5)

இரந்து பின் னிற்றல்.

(இ-ள்.) அங்ஙனமெண்ணிய தலைவன் தலைவிக்கு இதஞ்சொல்லிப் பின்னே நிற்றல்.

கெம்போ டொளிர்புயத் தோன்ஷம்சுத் தாசின் வரைசேர்
வம்போடு கூந்தன் மடமயி லேயுன்றன் வார்தனப்பொற்
கொம்போட விட்ட கொழுமுரத் தன்னிரு கூர்விழிய
மம்போட வைப்பி னமையுங்கொ லோவென் றருயிரே. (6)

முன்னிலையாக்கல்.

(இ-ள்.) தலைவி சிற்பது தன்காரியத்திற்கு [illegible] மென்றெண்ணி அவனைத் தலைமகன் முன்னிலையாக்கி மொழிதல்.

கோடும் பிறைநுதற் கோமள மேயுளங் கூர்ந்தெவரும்
பாடும் புகழ்ப்பெரு மான்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்
நாடும் பொழிலுஞ் சுனையு மடுத்துன்ற னுரியரோ
டாடுந் தொழின்மறந் தாய்தனித் தாயென்கொ லாதரமே. (7)

வண்டோச்சி மருங்கணைதல்.

(இ-ள்.) தலைவன் தலைவியினது கூந்தலிலுள்ள வண்டினை யோட்டுதல்போலத் தலைவியினது பக்கத்திற் சார்தல்.

தாதை யெனப்புரப் போன்ஷம்சுத் தாசின் றமிழ்க்கிரிசேர்
பேதை யிவள்பா லனிகா னிசைவகை பேசியிவள்
கோதை யடைந்தீர் மறந்தி ரொருநூல் கொளுமியனீர்
மேதை புரவீர் செறுவீ ரிசைவலர் மேவகமே. (8)

மெய் தொட்டுப் பயிறல்.

(இ-ள்.) தலைவன் தலைவி சீரத்திலே குறிப்பைத் தீண்டிப் பழகுதல்; அஃதாவது - தோளைத் தொட்டுரையாடல்.

சொற்கண்ட வாணர் தொடைபெ [illegible] குடுமுபர்
மற்கண்ட திண்புய மால்ஷம்சுத் [illegible] வெற்பிற்
கற்கண்டு வெண்டுங் கனதன [illegible] பட்டதாஞ்
முற்கண்ட மெய்ப்பொரு ளோர் [illegible] தே முற்றுறுமே. (9)

பொய்பாராட்டல்.

(இ-ள்.) தலைமகன் தலைமகள்மாட் டுள்ளது மில்லதுங் கூறிப் புகழ்ந்து கொண்டாடுதல். ஆயின்; உள்ளது கூறுதலும் பொய்பாராட்டலோவெனின்? அற்றன்று. மற்றென்னையெனின்? இல்லது கூறுவான் உள்ளதை விட்டுவிடுவா னல்லனென்க.

எல்லாரு மேத்துமிக் கோன்ஷடக்ஷரதாச னிருஞ்சிலம்பில்
வல்லாருங் கொங்கை மடமயி லேயுன்றன் வார்குழற்சீர்
செல்லார வேண்டி யலைவாய்ப் பயமிகச் சென்றலறி
யல்லாரு மேனுமக் கோசலம் விட்டங் கழுங்கிடுமே (10)

இடம்பெற்றுத் தழால்.

(இ-ள்.) தலைவன் தலைவியைத் தழுவுதற்கு வாய்த்த இடத்தைக் கண்டு கூறுதல்.

முந்தத் தவத்தின் முழுதுல கேத்த முதிர்ந்துதித்த
சந்தத் தடமுலை யிர்றுக்குங் கட்கணை தைத்தவலஞ்
சிந்தத் தயங்குமென் சிந்தா குலமறச் சேர்ந்தநர
விந்தத் திருப்பத வேள்ஷடக்ஷரதாசன் வியன்பொழிலே. (11)

வழிபாடு மறுத்தல்.

*(இ-ள்.) இரந்து பின்னிற்றன்முதலாகப் பொய்பாராட்ட லீறாகத் தலைவன் வழிபட்டதனைத் தலைவி மறுத்தல்.

பண்ணேறு மென்மொழிப் பாவலர் போற்றுநற் பைந்தமிழ்ச்சீர்
விண்ணேறு மாறமைத் தோன்ஷடக்ஷரதாசன் வியன்சிலம்பிற்
றண்ணேறு சாந்தஞ் சமைந்தனி தேறலுஞ் சார்ந்தனவி
லெண்ணேறு போதங்கொண் மாதவி யேயெம்மை யேற்றருளே.

இடையூறு கிளத்தல்.

(இ-ள்.) தலைவி வெட்கமுற்றுக் கண்ணை மூடிக்கொண்டு நிற்றலினா லெழுந்த துன்பத்தைக் கூறுதல்.

பாட்டாற்றி வந்தநற் பாவலர் வேண்டும் பரிசனைத்துங்
கேட்டாற்ற வல்லபு மான்ஷடக்ஷரதாசன் கிளர்வரையிற்
தேட்டாற் றிகழ்ந்த செழுந்தன நீத்துக்கை சேரலர்போற்
கோட்டாற்றை விட்டிய ராமன் புரங்கொளுங் கொள்கைநன்றே.

நீடுநினைந்திரங்கல்.

(இ-ள்.) புணர்ச்சி யெய்தாமையா லிவளுள்ள மெஞ்ஞான்று நிலையுமோ? வென நெடுநேரந் தலைவனினைந்து தலைவியைப் பார்த்துக் கூறுதல்.

பாராளு மன்னர்பி ரான்ஷடக்ஷரதாசன் பனிவரைசேர்
காராளுங் கூந்தற் கனியமு தேயுன் கனகட

மாராரும் கும்பத் தினையே துணையாய் மதித்தெழுந்தவ
ணீராரு மந்தக் கடிதட நீந்தி யிலைப்பதென்றே. (14)

மறுத்தெதிர் கோடல்.

(இ-ள்.) முன்வழிபாடு மறுத்ததனை மறுத்துத்தலைவி தலைவன் கூறிய சொல்லை யேற்றுக் கோடலைக் கூறுதல். போரேற்றா னென்பதற்குப் போரெதிர்ந்தானென்புழிப்போல. எதிர்தல் - ஏற்றல்.

கோடா தருள்குணத் தோன்ஷம்சுத் தாசின் குளிர்வரைவாய்
வாடா மலர்த்தொடை மன்னர்தங் காமவெவ் வாரிபொங்கி
யோடா தெழுந்துறி னெஞ்சே நமக்கோ குறைத்துணையாய்
நாடா தடுத்தெதிர் கிற்குங்கொ லோநந்த நாணனையே. (15)

வறிது நகைதோற்றல்.

(இ-ள்.) தலைவி முகத்திலே சிறுநகை தோன்றுதல்.

பொன்னு மொளிருமிப் பூங்கொடி தன்னுளப் போக்கனைத்து
மென்னு மெனமயங் கேந்தறம் மேக்க விருட்காரசர்
மன்னு மொளிருமெம் மான்ஷம்சுத் தாசின் மலையவெற்பின்
மின்னு மொளிர்ந்தது மெல்லிநல் லாண்முத்த வெண்ணகையே. ()

இக்கவி உரைப்பொருள் கேட்பொரு ளின்மையாற் கவிக்கூற்றென்று கொள்க.

முறுவற் குறிப்புணர்தல்.

(இ-ள்.) தலைவி சிறுநகையின் குறிப்பைத் தலைவனுணர்தல்.

பகைதந்த மன்னர் தினந்தந்த மூல பலந்தனக்கோர்
தகைதந்த வண்ணல்பி ரான்ஷம்சுத் தாசின் றமிழ்ச்சிலம்பில்
வகைதந்த வேரனி கொண்டோர் முலைக்கொடி மையலரு
ணகைதந்த தாலினி மன்றற் சகமிவ ளன்னியுமே. (17)

முயங்குத லுறுத்தல்.

(இ-ள்.) தலைவி புணர்ச்சிக்குடன்பட்ட அருமையை வற்புறுத்திக் கூறுதல்.

மலையான வந்த கலிவாணர் தம்மைக் கனககுவி
மலையான வைத்தபு மான்ஷம்சுத் தாசி னருஞ்சிகர
மலையானென் கண்டக்கோட்ட றடைந்தன மாமதன்வாய்ச்
சிலையானஞ் செய்தரு தேருர் தெரிந்தினிச் சேருதுமே. (18)

கலவியின் மகிழ்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைக் கலந்தலான் மகிழ்தல்.

திடங்கண்ட வாணர்பி ரான்ஷம்சுத் தாசின் செழுங்கிரிசேர்
விடங்கண்ட வேல்விழி மாதர சேயுன்றன் மெய்படுமோ

ரிடங்கண்ட சொர்க்கத் தின்பக் கனியமு தீர்தெனையுன்
றடங்கண்ட வானந்த வெள்ளத்து ளாழ்த்த தகைமையன்றே. (19)

புகழ்தல்.

(இ-ள்.) தலைவியினது நலத்தைத் தலைவன் வியந்து பாராட்டல்.

குன்று மணிப்புயக் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்வரைவாய்
மின்று ரணிகுழ லேயா ளிந்தமுன் மெல்லடிச்சி
றொன்றார வாடி யலைவாய்ப் பயமலர் தோங்குகண்ணீர்
பொன்று நிறைத்தொரு கானின்றன் ளுந்தங்கண் பூத்ததுவே.

இப்பதினாறு துறைகளுள், இரந்து பின்னிற்றற் சென்னல் முதல் நீடுநினைந்திரங்கலீறாகிய பத்தனுள், வழிபாடு மறுத்தலொழிந்த ஒன்பதும் வேட்கை புணர்த்தற்கும், வழிபாடுமறுத்தலொன்றும் மறுத்தற்கும், மறுத்தெதிர்கோடலும் வறிதுநகைதோற்றலுமாகிய இரண்டும் உடன்படற்கும், ஏனையான்கும் கூட்டத்திற்கு முரியன.

இயற்கைப் புணர்ச்சி முற்றிற்று.

---

## வன்புறை.

அஃதாவது-தலைவி ஐயுற்றவழி ஐயந்தீர்த்தலைவன் வற்புறுத்திக் கூறல்: அஃது-ஐயந்தீர்த்தல், பிரிவறிவுறுத்தலெனஇருவகைப்படும்; அவை: ஏற்புறவணிதல் முதல் இடமணித்தென்றலீறாகிய எழுவிரிகளையுடையன: அவை வருமாறு:—

ஏற்புறவணிதல்.

(இ-ள்.) புணர்ச்சியிடத்துத் தலைவி புனைந்த முத்தார முதலிய கொங்கையணி குழலணிகள் வேறுபட்டவற்றைத் தலைவன்றன்கையினால் வேறுபாடுதீரப் புனைதல்.

பொன்னணி சேர்புயத் தோன்ஷம்சுத் தாசீன் பொலன்கிரிவாழ்
மின்னணி நுண்ணிடை மெல்லிசல் லாயுன் மெலிந்திரங்கேன்
முன்னணி பின்னணி முற்றும் வகுத்து முதலிடைகான்
புன்னணி யாவுமின் னுயமு மின்புற மாட்டுவனே. (21)

அணிந்துழிநாணிய துணர்ந்து தெளிவித்தல்.

(இ-ள்.) தலைவன் அவ்வாறு புனைந்துழித் தலைவி பாங்கியாலணியப்பட்ட அணிக்கு இவர் கைபோலணியும் அணி வேறுபடுமென்றும், அதைப் பாங்கியறியில் ஐயம்பிறக்குமென்றும், நாணுற்றவெட்கப்பட்டாளாக, அதைத்தலைவனறிந்து தலைவியைத் தெளிவித்தல்.

பாவிய லாய்க்குள் வேலன்ஷம்சுத் தாசின் பனிவரைவி
ரேவிய மன்ன வெள்ளிர்முகத் தாபுன்ற னுண்மைசெறி
காவியங் கைவைத் தெழுத்தொடு சொற்பொருள் கண்டழியாப்
பாவிய லோதி முடித்தே னணியும்பின் னுய்தாவே. (22)

பெருநயப் புரைத்தல்.

(இ-ள்.) இனி, தலைவன் வருவானோ? வாரானோ? வென்றுதலைவி முகம் வேறுபட, அதைத்தலைவன் குறிப்பாலுணர்ந்து தனதுயிருக்க காதலைக் கூறுதல்.

காதுங் கவிக்குட் கரைதரப் பாடனி காளநிமி
ரோது மொருகைப் பிடியனம் போனடக் கோங்குமிரு
போது முலைமுத்தக் கத்துரை யாடற் புதவலியோன்
றேதும் பரும்புகழ் மால்ஷம்சுத் தாசி னிறம்பகத்தே. (23)

தெய்வத்திறம் பேசல்.

(இ-ள்.) மேற்கூறியதைத் தலைவிதெளியாதவளாகத் தலைவன் அவளூழ்வலியின் திறத்தைக் கூறுதல்.

விதியா லுயர்ந்த துரைஷம்சுத் தாசி னெடுவரைவாய்த்
துதியா ரயில்விழித் தூமொழி யேபுடற் றேமொழியே
மதியா லியற்றும் வலியுள தாயின் மருவருமோர்
விதியாம் பிணையிற் பிணைப்புறு நம்மையும் வெல்லரிதே. (24)

பிரியேனென்றல்.

(இ-ள்.) தலைவன் பிரிவனென்னுஞ் சலத்தியால் தலைவி யுடல் விளர்ப்பக்கண்ட தலைவன் உன்னைவிட்டுப் பிரியமாட்டேனென்று கூறுதல்.

சிறந்து வளர்கிரி யோன்ஷம்சுத் தாசின் செழுங்கிரிவாய்ப்
பிறந்து வளர்ந்தநற் பெண்கொடி யேயஞ்சிப் பேதுறனிற்
றுறந்துங் கனவி னனவோ டுனுவுங்கை சோர்ந்திதய
மறந்தும் பிரியேன் பிரியிற் றரிக்கிலன் மன்னுயிரே. (25)

பிரிந்துவரு கென்றல்.

(இ-ள்.) பிரியேனென்றது கேட்டு மகிழ்ந்த தலைவிக்குத் தலைவன் பின்பிரிந்து வருவேனென்று கூறுதல்.

அற்றே ரணிகுழ லாயிழை யாய்பொழி லாடுதிபோர்ச்
செற்றே பகைதடிக் தோன்ஷம்சுத் தாசின் செழுங்கிரிவாய்ச்
சற்றே பிரிந்து வருவேன் றரியேன் றரிக்கினுமக்
குற்றே யெனக்கொடு வந்திடு மென்னக முன்னகமே. (26)

இடமணித்தென்றல்.

(இ-ள்.) தலைவனூர் தூரத்திருக்கின்றதோ? சமீபத்திருக்கின்றதோ? வென்று தலைவி வருந்திய அதனைக் குறிப்பாற்கண்ட தலைவன் ஊரி ருக்குமிட மிகச்சமீபத்திருக்கின்றதென்று கூறுதல்.

யோகத்திற் சிறி துயர்விற் றகைமி லூற்றபல
போகத்திற் சிறந்தபு மான்ஷம்சுந் தரசின் பொலங்கிரிவாய்
மேகத்தி லோங்கு குழன்மட வீர்நகர் வேறலாம்
பூகத்தி னும்பூர் கமுக்கொடி யேறிப் புணர்ந்திடுமே (27)

இவற்றுள் முன்னையநான்கும் ஐயந்தீர்த்தற்கும், பின்னையமூன் றும் பிரிவறிவுறுத்தற்கு முரியன.

வன்புறை முற்றிற்று.

---

## தெளிவு.

அஃதாவது - தலைவன் கூறிய சொல்லைத் தலைவி மெய்யெனத் தெளிந்தாற்றுவது; இது - வகையும் விரியுமில்லாமனின்றது.

வான்பிறழ்ந் தாலு மலைபிறழ்ந் தாலு மதியிரவி
தான்பிறழ்ந் தாலும் பிறழாத் தகையர்சொற் றுன்றவுறி
யேன்பிறழ் வார்பிற ழார்வரு வார்மன மேங்குறல்பூந்
தேன்பிறழ் மார்பகத் தோன்ஷம்சுந் தரசின் சிலம்பகத்தே. (28)

தெளிவு - முற்றிற்று.

---

## பிரிவுழி மகிழ்ச்சி.

அஃதாவது-பிரிந்துபோகுமிடத்துப் பெருமின்ற தலைவி தன்மை யைக்கண்டு தலைவன் மகிழ்தல்; இது - வகையின்றிச் செல்லுங்கிழ த்தி செலவுகண் டுளத்தொடு சொல்லலும் பாகனொடு சொல்லலுமா கிய இரண்டு விரிகளை யுடையது; அவை வருமாறு:—

செல்லுங்கிழத்தி செலவுகண் டுளத்தொடு சொல்லல்.

(இ-ள்.) புணர்ச்சிக்குறி யிடத்தினின்றும் பெயர்ந்து செல்லாநின்ற தலைமகளது செலவைக்கண்டு தலைவன் தன்னெஞ்சொடு சொல்லுதல்.

மேகமு மோர்கைவெண் சோமனு மோர்கை விளக்கிடு
நாகமுங் கொண்டொரு நாகமு மன்னமு நாணுறவெச்

சோகமுந் தீர்த்தருள் வேன்ஷம்சத் தாசின் கடற்கிரிவா
யாகமு மொல்க வசைந்துறு மானந்த மாருயிரே. (29)

பாகனொடு சொல்லல்.

(இ-ள்.) தலைவன் தன்னைத் தேடிவந்த தேர்ச்சாரதியிடத்தில் தலைவி செல்லுதலைக் காட்டிக் கூறுதல்.

முன்னொடு பின்னு முறைமுறை பார்த்துன் முதிருமச்சர்
தன்னொடு வேர்ப்புந் தளர்வுமென் போன்புந் தாங்கிமன்னர்
மன்னொடு மாணிகர்த் தோன்ஷம்சத் தாசின் மலைவலவை
பொன்னொடு மின்னனைப் போவது பாரொரு பூங்கொடியே. (30)

பிரிவுழி மகிழ்ச்சி - முற்றிற்று.

---

## பிரிவுழிக்கலங்கல்.

அஃதாவது - தலைவி பிரிந்த இடத்துத் தலைவன் வருந்துவது; அது மருளுற்றுரைத்தல் தெருளுற்றுரைத்தலென இரண்டுவகைப்படும்; அவை; ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல் முதல் கண்படைபெறாது கலங்கலீறாகிய ஐந்து விரிகளையுடையன; அவை வருமாறு:—

ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

(இ-ள்.) தலைவியைப்பிரிந்த மாதர்கூட்டம் வந்து வழிபடுதலைக் கண்டு இம்மாதர் கூட்டத் துள்ளாளென்னைத் தனித்துக் கூடியது என்ன மாயமோ? வென்று தலைவன் மயங்கிக் கூறுதல்.

மெய்யோ டிரண்டெடுத் தன்பொன் றனித்துயர் மென்குழலின்
மையோ டொளிருங் கணமதி போல்வதி வானிலனோர்
கையோ டமர்தரு வேன்ஷம்சத் தாசின் கனகவெற்பிற்
பொய்யோ கனவோ பிறிதோ வறியேன் புணர்ந்ததுவே. (31)

வாயில்பெற்றுய்தல்.

(இ-ள்.) தலைவி உயிர்ப்பாங்கி முகத்தை நோக்கிச் செல்லுதலைப் பார்த்துத் தலைவன் அப்பாங்கியைத் துணையாகப் பெற்று உய்வதாகக் கூறுதல். பாங்கி - பக்கத்திலிருக்கு முயிர்த்துணைவி.

வருத்தி மயக்கு மயனோ யகற்ற மருந்துளதோர்
திருத்தி மணமே பிணையே லிவட னிணைவிழிவன்
டருத்தி பயிர்தனிப் போன்ஷம்சத் தாசி னருட்கிரிவா
பொருத்தி முகதா மரைமல ரோடி பொளிர்ந்ததுவே. (32)

பண்பு பாராட்டல்.

(இ-ள்.) தலைவியின் அழகைத் தலைவன் வியந்து கொண்டாடுதல். பண்பு - நன்மை அழகென்மே னின்றது.

அடிபடும் வட்டு மலர்படும் போது மமரிலெதிர்த்
தொடிபடுங் கொம்பு முடைபடும் வெற்பு மொளிர்பிறைக்குட்
பிடிபடும் புன்னும்பெம் மான்ஷம்சுத் தாசீன் பெருங்கிரிவாய்த்
துடிபடு நுண்ணிடை கொங்கைக் கிணைசொலத் தோற்றுறுமே ()

பயந்தோர்ப் பழிச்சல்.

(இ-ள்.) தலைவியைப் பெற்றோரைத் தலைவன் வாழ்த்தல்.

வந்திரத் தார்க்கருண் மான்ஷம்சுத் தாசீன் மலையபின்னை
யெந்திர வாவியை யின்பக் கனியை யெமக்களித்தோர்
சந்திர சூரிய ருள்ளள வும்புகழ்ச் சம்பனரா
யிந்திர னுஞ்சரி யுங்கடுத் தோங்கி யிலங்குகவே (34)

கண்படைபெறாது கங்குனோதல்.

(இ-ள்.) அன்றிரவிலே தலைவி தந்த ஆசையால் நித்திரை பெறாது இருட்காலத்தைத் தலைவன் நொந்து கூறுதல்.

படியோர் குடையிற்கொள் வோன்ஷம்சுத் தாசீன் பனிவரையின்
முடியோ கிரிகட லோவிழி யிந்தோ முகமெனயாக்
துடியோ டுரைத்த தொடரா லெமையவை சூழ்ந்தெழுந்து
விடியா மெனநீண் டுறுக்கிக் கருக்கி வெகுண்டிடுமே. (35)

இவற்றுள் முன்னைய தொன்றும் மருளுற்றுரைத்தற்கும், பின்னைய நான்குந் தெருளுற்றுரைத்தற்கு முரியன. காட்சிமுதல் கண்படை பெறாது கங்குனோதலிறுதியாகக் கூறிய முப்பத்தைந்து துறைகளும் முதனாள் நிகழ்ச்சி யென்க.

பிரிவுழிக்கலங்கல்-முற்றிற்று.

---

## இடந்தலைப்பாடு.

அஃதாவது - இயற்கைப் புணர்ச்சியிற் கலந்த தலைவன் மறுநாளவ்விடத்தில் வந்து தலைவியைக் கூடுதல்; அது: தெய்வத்தெளிதல் கூடல் விழைதலென மூவகைப்படும்; அம்மூன்றுந் தந்த தெய்வந் தருமெனச் சேறல் முதல் ஆயத்துய்த்தலீறாகிய ஐந்து விரிவினையுடையன; அவை வருமாறு:—

தந்ததெய்வந் தருமெனச்சேறல்.

(இ-ள்.) முன் கூட்டியவிதி பின்னுமவ்விடத்திற் சென்றாற் கூட்டுமெனத் தலைவன் சேறல்.

இன்றந்த விகையு மின்மையும் யார்க்கு மியல்பெனிற்செம்
பொன்றந்த மார்பன்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்

றன்றந்த வண்பொழிற் றோகையி னெம்முயிர்த் தோகையின்னை
முன்றந்த தெய்வ மிதுக்தரு மாலங்கு முந்துறவே. (36)

### முந்துறக் காண்டல்.

(இ-ள்.) முன்போலத் தலைவியைத் தலைவன் காணுதல்.

மாறு வமுத மழையோ கதிர்த மருவுருவோ
நாறு மணிவிளக் கோமதி யோவிதி நண்ணழகோ
தேறார் குடிகெடுத் தோன்ஷம்சுத் தாசின் சிலம்பகத்தோர்
கூறு யொளிரு முயிர்க்குயி ராமென் குலதெய்வமே. (37)

### முயங்கல்.*

(இ-ள்.) தலைவியைத் தலைவன் புணர்தல்.

மன்னர்க் கதிபதி மால்ஷம்சுத் தாசின் மலையமுத
மன்ன வருவா ளகங்கனிந் தாடு மருள்வெளியு
ளென்னி லவளு மவளகம் யானு மிரண்டறவொன்
றென்னக் கலந்த விருஞ்சுகம் யார்க்கு மியம்பரிதே. (38)

### புகழ்தல்.

(இ-ள்.) தலைவன் றலைவியைப் புகழ்ந்து கூறுதல்.

குடைபட்ட கோனுடைக் கோன்ஷம்சுத் தாசின் குளிர்சிலம்பின்
றொடைபட்ட கோதை யிவள்விழி நோக்கித் தொடர்ந்திலவாய்க்
கடைபட்டுத் தீப்பட் டடிபட்டுச் செம்புனற் கக்கிக்கக்கி
முடைபட்ட தன்றிச் சரிப்பட் டிலையினு மொய்கணையே. (39)

### ஆயத்துய்த்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை மகளிர் கூட்டத்துள் விடுத்தல்.

முலைகாட்டி முத்த நகையிதழ் காட்டி முழுதுமின்ப
நிலைகாட்டிக் காட்டுமென் னெஞ்சமன் னீர்கமழ் நெய்ந்நிலவே
விலைகாட்டி யோங்குகை யோன்ஷம்சுத் தாசி னிருஞ்சிகர
மலைகாட்டி யாடுநம் மாயத்துட் போந்தங்கு மன்னுகவே. (40)

இவற்றுள் - தந்ததெய்வம் தருமெனச்சேறலொன்றுந் தெய்வந் தெளிதற்கும், காண்டல் முயங்கல் புகழ்தலாகிய மூன்றுங் கூடற்கும் ஆயத்துய்த்தலொன்றும் விடுத்தற்கு முரியன. இவையாவும் இரண் டாரான் கிழ்ச்சி.

இடந்தலைப்பாடு முற்றிற்று.

---

## பாங்கற் கூட்டம்.

அஃதாவது - முன்னாள் தோழனுற் கூடுங் கூட்டம்; அது: சார்தல் கேட்டல் சாற்றல் எதிர்மறை நேர்தல் கூடல் பாங்கிற் கூட்டலென வெழுவகைப்படும்; அவ்வேழுந் தலைவன் பாங்கனைச் சார்தல் முதல் பாங்கிற் கூட்டலீறுமிய இருபத்துநான்கு விரிகளையுடையன; அவை வருமாறு:—

### தலைவன் பாங்கனைச்சார்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியால் வந்த ஆசைநோய் தோழனு லன்றித் தீராதென்றெண்ணி அவனைச் சார்தல்.

வாவியிற் காவிநற் பாலெரிடு நீரோன மாதலசஞ்
சீவியி லோங்குபு மான்ஷம்சுத் தாசீன் சிமையமத
னேவிய வெஞ்சிலைக் கஞ்சிநெஞ் சேயினை யேல்வருவா
யாவியி னுயிபன் னுளை னின்றென் னருந்துணைக்கே. (41)

### பாங்கன் தலைவனையுற்றது வினவல்.

(இ-ள்.) பாங்கன் தலைவனது மனமும் புயமும் வாடிய வேறு பாடு கண்டு இவ்வேறுபாடு வந்ததற்குக் காரணமென்னை? யென்று கேட்டல்.

நீடாழி வைய நிலைபிறழ்ந் தாலு நிலாப்பகலற் [ல்
றோடா தொழியினு மொண்டமிழ் தேர்ந்துணர்ந் தோர்க்கொருத்த
கோடாது கோடிதந் தோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்ப
வாடா மலர்ப்புயம் வாடிய வாறென் வழுத்துகவே. (42)

### தலைவனுற்றதுரைத்தல்.

(இ-ள்.) அங்ஙனங் கேட்ட பாங்கனுக்குத் தலைவன் தனக் குற்ற வேறுபாட்டின் காரணத்தைக் கூறுதல்.

நீதஞ் செறிகுணத் தோன்ஷம்சுத் தாசீ னெடுங்கிரிவா
யேதந் தவிருற வேரவெழிற் காமனுற் றெய்தருமென்
போதஞ் சரியப் பொருதியனி சாடப் பொருதுநந்த
வாதங் கடுப்ப மலிபுலன் றூர்த்ததொர் மாதங்கமே. (43)

### கற்றறி பாங்கன் கழறல்.

(இ-ள்.) வேதாகமங்கள் யாவுங் கற்றறிந்த பாங்கன் தலைவனை யிடித்துக்கூறல்.

என்னே கலைகள் முழுதுற வாய்ந்தின் றெழிலனைக
மன்னே யெனவரு மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பின்
பொன்னே புரையுமெய் பூணலங் கண்ட புரவலவும்
பின்னே கிசர்த்தபெண் பேதைக் கழிதல் வியப்பலவே. (44)

கிழவோன் கழறெதிர் மறுத்தல்.

(இ-ள்.) பாங்கன் கூறிய உறுதிமொழியைத் தலைவன் மறுத்தல்.

ஆட்சியுங் கோலுங்கொள் வாணன்றஞ் சைத்தரசி னருண்மலையின்
மாட்சியுங் கொங்கை மலையும் வதன மலருமைம்பா
னீட்சியும் பாலநிலவும் புருவ வில்லுமையுங்கண்
காட்சியுங் காண்டில காண்டிற் கவல்வைகொல் கட்டுரையே. (45)

பாங்கன் கிழவோற் பழித்தல்.

(இ-ள்.) அங்ஙனங் கூறிய தலைவனைப் பாங்கன் சீறித்துக் கூறுதல்.

காரைத் தருவையன் றோன்றஞ்சைத் தரசின் கனகவெற்பொன்
றாரை நிகர்ப்பவொ ராயிழை யாட்கங்கி லாதவிடைச்
சீரை யிரிக்குடைத் தாயர் செயிது தெரிற்சிறு
கோரை வளர்த்துயர் கோபுர மாய்த்தெறுங் கொள்கைத்தன்றே.

கிழவோன் வேட்கை தாங்கற் கருமைசாற்றல்.

(இ-ள்.) தலைவன் பாங்கனை நோக்கி நீ பழிக்கின்ற வென்னுள்ளத் தேறுதற்கு வேட்கை யென்னாற் றாங்கமுடியாதெனக் கூறுதல்.

துங்கத் திருகுணைத் தோன்றஞ்சைத் தரசின் சுடர்க்கிரிவாய்த்
தங்கக் கடுத்தொளிர் தையனல் லாடனக் காங்கிடைவெஞ்
சிங்கம் பிளந்த செழுமுரத் தன்பனின் னீயெனுஞ்சொற்
புங்கம் புகுதிற் பொறுப்பன்கொ லோவுயிர் போன்றறுமே. (47)

பாங்கன் றன்மனத் தழுங்கல்.

(இ-ள்.) அதுகேட்ட பாங்கன் எம்பெருமான் ஆற்றானா யிவ்வாறு கூறினால் அதற்கு நானென் சொல்வேனென்று தன்னுள்ளே வருந்துதல்.

முத்துண் டொளிர்புயத் தோன்றஞ்சைத் தரசின் முதிர்கிரிவாய்
பெத்துண் டிலகுமொ ரேந்திழை யெய்த விணைவிழிவேற்
குத்துண் டிருமுலைக் கோடுண் டனுதினங் கூர்ந்தமையற்
பித்துண் டழிந்தன னம்மா சென்செயும் பேருலகே (48)

பாங்கன் றலைவனோடழுங்கல்.

(இ-ள்.) இங்ஙனம் வருந்திய பாங்கன் சகியாதவனாய்த் தலைவனோடு வருந்துதல்.

கலகந் தருமொரு கட்கடை மாதிடு காமவலை
யிலகுஞ் சுழனைக் கென்சொலென் றேவினி யெங்குமொளிர்
திலக மெனவமர் வாணன்றஞ் சைத்தரசின் சிமையவெற்ப
வுலகம் புரானி லொருவருண் டோவுத வொத்திடற்கே. (49)

MAHAMAHOPADHYAYA

எவ்விடத்தெவ்வியற்றென்றல்.

(இ-ள்.) பாங்க னிவ்வாறு கூறியும் தலைவன் வருந்துதலைக் கண்டு இவன் தலைவியைக் கூடாதொழியின் இறந்துபடுமென்று தேறித் தலைவனை நோக்கி நின்றாற் காணப்பட்ட உரு எந்தவிடத்து எந்தவியலை யுடையதென்று வினாவுதல்.

வானகஞ் சூழ்ந்த மகிதலத் துன்மன வன்மையெல்லாந்
தானகற் றற்கெழு மம்மான் றனக்கிடந் தண்ணருட்கோ
ரானகம் போன்றமர் வோன்ஷம்சுத் தாசி னருஞ்சிகரக்
கானக மோகட லோவிய லேது கழறெனக்கே. (50)

அவனஃதிவ்விடத்திவ்வியற்றென்றல்.

(இ-ள்.) தலைவன் என்னால் காணப்பட்டவுரு இந்தவிடத்து இந்த இயலை யுடையதென்று கூறுதல்.

புயலே குழலம் புயமே முகமுடற் பொன்னிடைநூல்
கயலே விழிமுக் கனியே மொழிமுலை கைக்கனிறென்
மயலே தருவாட் கியலிட மார்வல மாழைமழை
பெயலே பெறுகரத் தோன்ஷம்சுத் தாசின் பெருவனமே. (51)

பாங்கனிறைவனைத் தேற்றல்.

(இ-ள்.) இவ்வாறு நீ வருந்தா தொழிக: நீ சொன்ன குறியிடத்துச் சென்று தலைவியைக் கண்டு யான் வருகிறேனென்று தலைவனைப் பாங்கன் தேற்றல்.

திருவே யமர்புயத் தோன்ஷம்சுத் தாசின் செழுங்கிரிசேர்
மருவேய் பெருவனத் துன்மன மாள்வித்து மன்னுயிரைப்
பொருவேல் விழியைப் புலன்கொளு மாசையைப் போக்கறிந்து
வருவேன் வருமள வும்பொறுப் பாயென்றன் மன்னவனே. (52)

குறிவழிச்சேறல்.

(இ-ள்.) தலைவன் கூறிய குறியிடத்துத் தலைவியைக்காணப் பாங்கன் தேடிப்போதல்.

முலைப்பகை கண்டு மொழிப்பகை தேடி முழுதுமக்கக்
கொலைப்பகை கொய்ய வெழுவன்கொல் லோகறை கூர்வனத்தும்
பலைப்பகை கொள்ளுரத் தோன்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்க்
கலைப்பகை தோட்டுணைக் காவலன் கண்டவக் காரிகையே. (53)

இறைவியைக்காண்டல்.

(இ-ள்.) அவ்வனத்தேடிச்சென்றபாங்கன்தலைவியைக்காணுதல்.

வானே முடிவடி வாளே விழிமலர் வாய்வளைதோள்
தேனே மொழிமதிச் சீரே முகமுடற் றேசமெங்கு

ஈரனே யெனப்புரப் போன்ஷம்சுத் தாசி னனிர்வரையின்
றனே வெருவனத் தெம்பிறை சொற்றவத் தாழ்குழலே. (54)

இகழ்ந்ததற்கிரங்கல்.

(இ-ள்.) தலைவிபேரழகைக் கண்ட பாங்கன் காணுமுன்னம் எம்பெருமானை யறிவின்றியிகழ்ந்தன மென்றிரங்கிக் கூறுதல்.

தாவுண்டு செல்பரி வேன்ஷம்சுத் தாசின் றமிழ்வரைவாய்
மேவுண்டு வாழுமில் வெண்ணகைத் தேமொழி யின்னுதலைக்
கேவுண்டு நெஞ்ச மினைவுண்டு யர்தவென் னேர்தலையா
னேவுண்டு வாட லவன்றவெ லாமென்ற னேப்பறிவே. (55)

தலைவனை வியத்தல்.

(இ-ள்.) தலைவி கண்வலையிற்சிக்கி அத்தடையோமெக் தலைவன் தம்மிடத்து வந்தது வியப்பென்று பாங்கன் அதிசயித்துக்கூறுதல்.

பொறையார் பெருந்தனப் பொற்றொடிச் சிற்றிடைப் பூவையின்று
ணிறையா ரலர்க்குழ னீண்முகி லோடி திகழ்ந்துபன்னாற்
குறையா துணர்ந்தவென் கோன்ஷம்சுத் தாசின் கொழுங்கிரிவாய்
மறையா திருந்ததெவ் வாறெம்பி ரான்கலை மாமதியே. (56)

இதுவுமது.

கலைதாண்டி யோங்குமிக் கோன்ஷம்சுத் தாசின் கனவரையின்
னிலைதாண்டிக் கூர்த னிசிதாண்டித் தேம னிலவுமுலை
மலைதாண்டித் துண்ட மதிதாண்டி யெம்மன் மதிசயன
வலைதாண்டிக் காம வலைதாண்டி வந்ததங் கற்புதமே. (57)

தலைவியை வியத்தல்.

(இ-ள்.) தலைவியைப் பாங்கன் வியந்து கூறுதல்.

பருக்கும் பெருமுலைப் பாரத்தி னக்தரப் பற்றொழிந்தின்
றிருக்கு மொருமின் னிவள்விழி கோக்கினை யென்றமுற்றோர்
திருக்குங் கருத்துமொத் தோன்ஷம்சுத் தாசின் சிலம்பரசைக்
கருக்கு மயல்விடக் காய்வுக் கழுதெனக் காத்திடுமே. (58)

இவ்வைந்தும் பாங்கன்றன்னுட் கூறியவை.

தலைவன்றனக்குத் தலைவி நிலைகூறல்.

(இ-ள்.) தலைவி குறியிடத்துத் தனித்து நிற்கின்ற நிலையைப் பாங்கன் கண்டுவந்து தலைவனுக்குக் கூறுதல்.

காவுங்கண் டேன்குழற் காடுங்கண் டேனின்னைக் காத்துறைகட்
கோவுங்கண் டேனுடற் கோலங்கண் டேனலங் கூர்பெருகும்
பாவுங்கண் டேமகிழ் வோன்ஷம்சுத் தாசின் பனிவரைவாய்
யாவுங்கண் டேன்கண்டி லேனிறை வாவின் னியமின்மையே. (59)

தலைவன்சேறல்.

(இ-ள்.) தலைவன் பாங்கன் சொற்படி குறியிடத்திற் போதல்.

மணமாய் விரைக்தவன் மன்னுதற் கேற்ற வழியெதுவு
மிணமா யதிர்ந்தில மேயக மேசெய்வ தேதெனிபோர்
தணமா பொளிரும்பு மான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பி
னணமா யமர்ந்துறிற் பார்தமைக் கூடி யளாவுதற்கே. (60)

தலைவியைக் காண்டல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைப் பார்த்தல்.

வற்றாச் சுனிர்தமெய் வாழ்வளித் தென்னுள மன்னிநின்ற
முற்று முகிழ்முலை மொய்குழ லான்கலை முற்றுமுற்றக்
கற்றார்க் கமுதனை யான்ஷம்சுத் தாசீன் கனகவெற்புட்
பொற்று மரையணம் போற்றனி நின்றனள் பூம்புனத்தே. (61)

கலவியின் மகிழ்தல்

(இ-ள்.) புணர்ச்சியின் மகிழ்தல்.

மெய்யுஞ் செவியும் விழிநாசி வாயும் விரைந்தருத்திப்
பெய்யு மமுதப் பிழம்பனை யிரும்பிற் பெற்றசுகம்
[illegible]ய்யும் புலையுமற் றோன்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பி
லெய்யுங் ககனே டிகதலத் தாருமின் கெய்தரிதே. '(62)

புகழ்தல்.

(இ-ள்.) தலைவன்புணர்ந்தபின் றலைவியைப் புகழ்ந்துகூறுதல்.

அலைவாய்ப் படிந்தனை யாகமுங் கூனி யறக்குறுகி
மலைவா யெழுந்தனை மாசே செறிந்தனை மாமறைநாற்
கலைவாய் வருமியல் போன்ஷம்சுத் தாசீன் கனகமலை
நிலைவா யிணைமுலை சேர்ந்த லொத்திலை நீணிலவே. (63)

பாங்கியோடு வருகெனப் பகர்தல்.

(இ-ள்.) இனி நீ புன்னுயிர்ப்பாங்கியுடனே வருவாயென்று தலைவிக்குத்தலைவன் கூறுதல்.

கண்ணுக் கிமையுங் கடத்துக் குயிருங் கலந்ததொத்தெம்
மெண்ணுக் கருளனை யினினி நீயிவ ணேகினென்றும்
பண்ணுக் கிசைபுக ழோன்ஷம்சுத் தாசீன் பனிவரைவாய்
மண்ணுக் கணிசெய்தம் மன்னையர் தம்மொடு மன்னுகவே. (64)

பாங்கிற் கூட்டல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை ஆயத்திற் செலுத்துதல். ஆயம்-மாதர் கூட்டம்.

சுனைநயப்புரைத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவி புனை திகழ்ச்சியை வெளிப்படுத்தச் சுனையினது நன்மையைக் கூறல்.

அணியுந் திருத்தி யழகும் பொருத்தி யழிதருநற்
றுணியு மிருத்தித் துயிரீ ரருத்தித் தொடர்ந்தரசர்
பணியும் பதத்தனெம் மான்ஷம்சுத் தாசின் பதியினலர்க்
கணியும் புனைந்தென் கண்மணி யிரெங் கவின்சுனையே. (68)

சுனைவியந்துரைத்தல்.

(இ-ள்.) பாங்கி அச்சுனை வியப்பை யானுமாடிக் காண்பேனென்று கூறல்.

காவி சிவந்து கமலம் பசந்து கருதுமல்லி
மேனி வெளுத்து விடுமே யடியேன் விளங்குமொன்று
ராவி யகற்றுமெம் மான்ஷம்சுத் தாசி னணிவரைவாய்த்
தாவி பொலிரும்பின் னேகுடை வேனந்தத் தண்சுனையே. (69)

தகையணங்குறுத்தல்.

(இ-ள்.) தலைவியினது வேற்றழகு கண்டு அவளைத் தெய்வப் பெண்ணாகப் பாங்கி வலியுறுத்திக் கூறுதல்.

காவே புகுந்து கழங்காடி யாடிக் கதித்தசுனைப்
பூவே கொணருமென் பொன்னுருப் போன்றயிப் பூதலத்தோர்
கோவே யெனவரு வேல்ஷம்சுத் தாசின் குலக்கிரியின்
றேவே வெளுத்திதழ் மெய்பசந் தக்கண் சிவந்தனையே. (70)

நடுங்க நாட்டம்.

(இ-ள்.) தலைவி நடுங்கத்தக்கதாகப் பாங்கி யாராய்தல்.

பொய்யா மொழித்திறத் தோன்ஷம்சுத் தாசின் பொதியைமலர்ச்
செய்யா ளனவொளிர் சேயிழை யீரவன் செம்பொன்மழை
பெய்யா திருந்து மிறங்கிச் சிவந்த பெருங்கரம்போன்
மையார் களிற்றொரு கோடுகண் டேமன மாழ்கினனே. (71)

இத்துணையு மூன்றாநாள் நிகழ்ச்சி யென்க.

---

## குறையுறவுணர்தல்.

அஃதாவது - தலைவன் தழை முதலியவற்றைக்கொண்டு தன்பாற் குறையுற்று நிற்பக்கண்டு பாங்கி அதனுனே கூட்டமுண்டென் றறிதல்; அது: தேர்தல் தெளிதலென இருவகைப்படும். தேர்தல்-ஆராய்ச்சி செய்தல். அவை வருமாறு:—

பெட்டவாயில்பெற்றிரவு வலியுறுத்தல்.

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்ப் பிரிவுழிக் கலங்கலின் வாயில் பெற்றுய்தலென ஆண்டு விரும்பப்பட்ட பாங்கியைத் தலைவன் அதரகப்பெற்றுக் குறையிரந்தலை வற்புறுத்திக் கூறுதல்.

பொருளா லறமும் பொலிவாற் புகழும் பொருந்துறல்போற்
றெருளா துயர்த்தபி ரான்ஷண்முகத் தாசின் செழுஞ்சிலம்பி
லிருளா மதிமுகத் தேந்திழை தன்னுயி ரென்னுயிவ
ளருளாற் பெறலா மகமே யவட னருந்தனமே. (72)

ஊர் வினாதல்.

(இ-ள்.) தலைவன் கண்ணியுந் தழையுமேந்திக் குறையுற்றவன் போலவந்து நின்று ஊர்யாதென்று பாங்கியைக் கேட்டல்.

மதியே நிகர்த்த மலர்முகத் தீர்வண்மை வாய்ந்தவிரு
நிதியே யெனவருள் வோன்ஷண்முகத் தாசி னெடுவரைக்கோர்
புதியேன் றனியிவண் போந்தன னும்பிற் பொலிவுறுமப்
பதியே துரையீர் பகரிற் சிதைவுங்கொல் பான்முத்தமே. (73)

பெயர் வினாதல்.

(இ-ள்.) வெளி.

காரே யனைய தருங்குழ லீர்நற் கனகமணித்
தேரே பெறுகழ லோன்ஷண்முகத் தாசின் செழுஞ்சிலம்பி
ஊரே புரைக்கலி லீருமக் கின்புவ தற்றதிருப்
பேரே னுமோதுதி ரேழையென் மீது பிரியமுற்றே. (74)

கெடுதி வினாதல்.

(இ-ள்.) கெட்ட பொருளைத் தலைவன் பாங்கியிடத்தில் வினவுதல்.

துப்புண்டு சேக்குந் துவரித ழீரென் சுடர்க்கணைமுன்
றப்புண் டடிக்கடி தாவுண் டொருமான் றரணிமுற்று
மொப்புண் டொளிர்புயத் தோன்ஷண்முகத் தாசி னுயர்வரைவாய்
வெப்புண் டொழித்துறக் கண்டதுண் டோவிள்ளு மீரெமக்கே. ()

வழி வினாதல்.

(இ-ள்.) தலைவன் றான்செல்லும் வழியைப் பாங்கியிடங் கேட்டல்.

கல்லுங் கருதுங் கனதனத் தீரொளி கண்டுகதி
ரெல்லும் பணிமுடி யோன்ஷண்முகத் தாசி னிருஞ்சிலம்பிற்
செல்லும் வழிதெரி யேன்றிசைத் தேனுளந் தேர்ந்தகலச்
சொல்லு மொருவழி சொன்னா லினியிலைச் சூழ்பிழையே. (76)

பொசப்புன் டொளிரிடைப் பூவையன் னிருங்கட் புங்கமங்கள்
வைப்புன் டவிர்புய மால்ஷம்கத் தாரின் மலையவெற்பிற்
றைப்புன் டொரத்தக் ததும்புண்டு வாடித் தளர்ந்தனையிச்
செப்புன் டிரிந்திவண் வந்ததன் றேடொவொ சிருங்கனிரே (81)

எதிர்மொழி கொடுத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவன் வினவுக்கு விடைகூறுதல்.

என்னுயிர் மாதங்க மன்றிபொர் மாதங்க மீங்கிலையுந்
தன்னுயி ருன்னொடு சார்ந்ததின் றென்றுந் தாரணிக்கோர்
மன்னுயிர் மானவர் றோன்ஷம்கத் தாரின் மணிவரைவாய்ப்
பொன்னுயிர் போலும் புனிதமற் றேது புகலுதற்கே (82)

இறைவனை நகுதல்.

(இ-ள்.) தலைவனைப்பாற் சென்றனைப் பாங்கி தலைவியை நோக்கி அசதியாடல். அசதியாடல் - சிரித்துப்பேசுதல்.

தழையா லொருதுகி தான்படு போகடற் றாரணியின்
மழையா லிருமர மாய்வுறு போனியர் மாற்றமென்றுங்
குழையாப் பொருந்தலக் கோன்ஷம்கத் தாரின் குளிர்வரைவாய்ப்
பிழையாங் கபடாம் பிரித்தெடுத் தாயினம் பெண்ணணங்கே. ()

பாங்கி மதியி னவரவர் மனக்கருத் துணர்தல்.

(இ-ள்.) பாங்கி தன்னறிவால் தலைவன் தலைவியென்ற இருவர் மனக்குறிப்பை யாராய்தல்.

வாயாற் கலையும் வளைவாற் புணரு மகிழ்ந்திருவ
ராயா வுறினு மகமோ மயல்கொண் டலைதருங்கண்
ணேயா துறுகுறை யாவு முரைக்கு முலகினைத்துத்
தாயாய்ப் புரந்தனிப் போன்ஷம்கத் தாரின் றடத்தகத்தே. (84)

இவ்வைந்து மிருவருமுளவழி யவன் வரவுணர்தலின் விரியென்க.

பாங்கிமதி யுடன்பாடு முற்றிற்று.

---

## பாங்கியிற்கூட்டம்.

அஃதாவது - பாங்கியாற் கூட்டுவிக்கத் தலைவன் தலைவியைக் கூடுங்கூட்டம், அஃது இரந்து பின்னிற்றல் சேட்படை மடற்கூற்று மடல்விலக்கு உடன்படல் மடற்கூற்றொழிதல் குறைநயப்பித்தல் நயத்தல் கூட்டல் கூடல் ஆயங்கூட்டல் வேட்டல் எனப் பன்னிரண்டு வகையினை யுடைத்து; அவை வருமாறு:—

தலைவ னுட்கோள் சாற்றல்.

(இ-ள்.) தலைவன் தான் தன்னுள்ளத்தின்கட் கொண்ட காதலைக் கூறுதல்.

கண்டே கிகர்த்த கனிமொழி யீர்சொலிற் கற்பகமுங்
கொண்டே வருவ ளெருதிறி யெங்கே னுறுதலர்காற்
றண்டே பணிபதத் தோன்ஷம்சுத் தாசீன் றடத்திடைநாக்
தொண்டே பணிப்பத் துணைபுரிந் தாளுளன்டன் றேத்திரமே ()

பாங்கிகுலமுறை கிளத்தல்.

(இ-ள்.) தலைவன் இவ்வாறு கூறியதற்குப் பாங்கி குலமுறை மையா விலையயாதென மறுத்துக் கூறுதல்.

புனமே புவனம் பொதுவறக் காத்திவண் போந்ததுந்தங்
கனமே சிறுமை கருதிலை நாளுங் காதலர்க்கு
வனமே தருங்கொடை மான்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி
னினமே பதிதி யிழிக்கோர்க் குயர்ந்தோ ரிணையிலரே. (86)

தலைவன் றலைவி தன்னை யுயர்த்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை யுயர்த்திக் கூறுதல்.

சிப்பியின் முத்தமுஞ் சேற்றின் மரையுஞ் செனித்திடினு
மொப்பியிங் கேற்கில நன்றிகொ லோவுல குங்ககனுஞ்
செப்பிய மாதவத் தோன்ஷம்சுத் தாசீன் சிலம்பணியி
ரப்பிய நன்னல மல்லா லிலைகுல மாயிழைக்கே. (87)

பாங்கி யறியாள்போன்று வினாதல்.

(இ-ள்.) தலைவன் தலைவியிடத்துக் காதல்கொண்ட தறியாள் போல நீ யவளிடத்துக் காதல்கொண்டாயெனப் பாங்கி வினாதல்.

கனையும் பொழில்கமழ் கூசல்பந் தோடலர் சூழ்தெழிலம்
மனையும் பயிலுநர் பற்பல ரன்மத மாரிசிந்தி
முனையுங் கடகளிற் றோன்ஷம்சுத் தாசீன் முழுமலைக்கென்
றனையு மறைத்துனைத் தான்மறை யாரெவர் கார்மன்னனே. (88)

இறையோனிறைவிதன்மை யியம்பல்.

(இ-ள்.) தலைவன் தான் காதலித்த தலைவி தன்மை கூறுதல். தன்மை - இலக்கணம்.

மருளும் பிணைவிழி மாகுஞ் சாமுலை வாய்குமுத
மிருளும் புயல்குழ லேகின் மதிமுக மென்றுமின்று
மருளுந் திருக்காத் தான்ஷம்சுத் தாசி னருட்சிலம்பிற்
றெருளும் பொலிவுங்கொள் சேயிழை யேயென்றன் றேமொழிக்கே.

பாங்கி தலைவி யருமை சாற்றல்.

(இ-ள்.) தலைவி கிடைத்தற்கரியளென்று பாங்கி கூறுதல்.

அறிவே யுருவா யவதரித் தெங்க ளருந்தவத்தின்
செறிவே யெனவருந் தெய்வத மின்முன் சினந்தெதிர்த்தோர்

முறிவே தரப்பொரு தோன்றம்சந் தாசின் முதிர்கிரியிர்
பிறிவே தருமுகை பரதொன்றும் யாமங்குப் பேசரிதே. (90)

தலைவனின்றியமையாமை யியம்பல்.

(இ-ள்.) தலைவியில்லாது வாழ்வெனக்கில்லையெனத் தலைவன் கூறுதல்.

சொன்னமி லாது சுகம்வரு மோவென்றுங் குற்றதசர்
இன்னமி லாதழிப் போன்றம்சந் தாசின் செழுங்கிரியாய்ப்
பின்னமி லாதொளிர் போரு மிர்கைப் பிடிபடுமோ
நன்னமி லாதின் றமைபுங்கொ லோவென்ற ஞநிரே. (91)

பாங்கி நிற்குறை நீயேசென் றுரையென்றல்.

(இ-ள்.) தலைவியினிடத்து எனக்கு வேண்டுவனவற்றை நீயே சொல்லென்று பாங்கி கூறுதல்.

வாயே யெவர்க்கும் வருங்குறை சொற்றிட வாய்த்துளதிந்
நாயே னெதற்கு நவிலவொ ணாதுற்ற நற்றமிழ்க்கோர்
தாயே யெனவருள் வோன்றம்சந் தாசின் றவிச்சிலம்பி
னீயே யிகழ்த்துக நின்குறை யாவுமக் கேசிறைக்கே. (92)

பாங்கியைத் தலைவன் பழித்தல்.

(இ-ள்.) தலைவன் பாங்கியை நிந்தித்துக் கூறுதல்.

செயலா ருயர்தபு மான்றம்சந் தாசின் சிமையபின்னிள்
கயலா யமர்த்த கடுவிழி பாய்ந்து கலங்குமென் றன்
மயலாங் கனற்கு மழையாய் நினைத்துநின் வார்த்தைமுற்றும்
புயலாய் முடிந்தது பூவையன் னீசொன்ன புத்திபிதே. (93)

குறையுறவுணர்தன்முதலிதுகாறு நான்காநாள் நிகழ்ச்சியென்றுணர்க.

பாங்கி பேதைமை யூட்டல்.

(இ-ள்.) தலைவி பிறர்துயரமறியாளென அவளது பேதைமையைப் பாங்கி தலைவனுளங் கொளச்சாற்றல்.

பாரார் பழிச்சும்பு மான்றம்சந் தாசின் பதிக்கரசே
கரார் கரிகலை மான்முத லாம்பல கான்விலங்கை
யோரா துறவதைத் தானுறும் வேட ருவந்தளித்த
கூரா ரயில்விழி யின்னே ளறியுங் குணமிலளே. (94)

காதலன்றலைவி மூதறிவுடைமை மொழிதல்.

(இ-ள்.) அவ்வாறு கூறிய பாங்கியை நோக்கி முதிர்ந்த அறிவினையுடையாள் தலைவியாதலின் அவளை யங்ஙனங் கூறற்பாலையல்லையென்று தலைவன் கூறுதல்.

வாயா துலகம் வழுத்துந்தம் மெண்ண மறிவிழிகொண்
டோர்பா துரைத்தெனக் குன்னியுந் தந்துடைத் தோடுகைத்

தாயாய்ப் புரந்தருள் வோன்ஷம்சுத் தாசீன் சயிலமன்னு
போபா மருங்கையு மெய்யட் கோவில்லை யிரங்குணமே (95)

பாங்கிமுன்னுறு புணர்ச்சி முறையுறக்கூறல்.

(இ-ள்.) இவ்வாறு கூறக்கேட்ட பாங்கி முன் பின்வேட்கைநீர்த்தானென்று கூறினையே! அவ்வனமே யின்னங்கூறுகவென்றுகூறுதல்.

முன்னு லறிந்தவின் முற்றிழை தன்னை முயங்குதற்குப்
பின்னு லொருவரை வேண்டுங்கொ லோபுவிப் பொன்னனைக்கின்
மன்னு புதிதரு மாஷம்சுத் தாசீன் மலையவெற்ப
தன்னால் வருந்துயர் தானறி யாளங்குச் சாருதியே. (96)

தன்னிலை தலைவன்சாற்றல்.

(இ-ள்.) அதுகேட்ட தலைவன் வேட்கை நோயால் வருந்துந் தன்னிலைமையைப் பாங்கிக்குக் கூறுதல்.

கடலிற் படிந்தெழு காவகம் புக்குங் கனிந்ததென்ற
னுடலிற் புகப்புனை தானுந்தன் சீர்த்தி யுலகனைத்து
நடலிற் பெரியபு மான்ஷம்சுத் தாசினன் னுடனையீர்
விடலி லவண்மயல் வெந்திக் குனையன்றி வேறிலையே. (97)

பாங்கியுலகியலுரைத்தல்.

(இ-ள்.) உலகில் வேட்கை கொண்டார் சான்றோரை முன்னிட்டு வரைந்து கொள்வர். அவ்வா றுலகியலாதலால் நீயும்வரைந்து கொள்கவெனப் பாங்கி கூறுதல்.

மறையார் மொழிப்படி மாநிலத் தெங்கு மகிழ்வுறநன்
னிறையார் கனிதரு நீண்மணங் காண்பது நேர்மையல்லாற்
பொறையார் கருணைப்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்
குறையார் மொழிபல கூறிலெவ் வேனுயர் கொற்றவனே. (98)

தலைமகன் மறுத்தல்.

(இ-ள்.) அவ்வுலகியலைத் தலைவன் வேட்கையாற்றாதுமறுத்தல்.

வருந்தி மயங்கு மயலேறு யனித்தவம் மாதரசை
விருத்தி புறவரைத் தேற்றிடென் றுபிது வெற்றரைக்குச்
செருத்தி யிளம்பிறைச் சேய்ஷம்சுத் தாசீன் சிமையமன்னுப்
பருத்தி விதைத்துப் படக்கொள லாமேப் பான்மையன்றே. (99)

பாங்கியஞ்சியச்சுறுத்தல்.

(இ-ள்.) பாங்கி இச்செய்கை பிறரறிவரென்று பயந்தவளாய்த் தலைவனை அப்புனம்விட்டுப்போக அச்சுறுத்திக்கூறுதல்.

மாலையும் வந்ததெம் மன்னர்பொல் லார்வந்து வாய்ந்தவறச்
சாலைய நாடுறன் வோன்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பிற்

